# விசேஷ வர்த்தமானங்கள்

## GENERAL NEWS

### பருத்திக்கொட்டை எண்ணெய்

கல்கத்தாவிலிருக்கும் அமெரிகன் கான்ஸல் ஜெனரலாகிய மைகேலவர்கள் (W. H. Michael) சிறிது நாள் முன்பு எழுதிய பிரசுரத்தில் இந்தியாவில் பருத்திக்கொட்டையிலிருந்து சாப்பிடக்கூடிய கொழுப்பு உற்பத்தியைப்பற்றிச் சிறிது விவரித்தெழுதியிருக்கிறார். சென்ற இரண்டு வருஷங்களுக்குள்ளாக நெய்யின் விலை இரண்டேகால் பங்குக்கதிகமாய் எறி இருக்கிறது. இதனால் இதற்குமுன் வாங்கிக்கொண்டிருந்த எழை ஜனங்கள் இப்பொழுது வாங்கக்கூடாமல் போய்விட்டது. சென்றவருஷம் 600-லக்ஷம் ரூபாய் விலையுள்ள நெய் உற்பத்தியாக்கப்பட்டது. ஆகையால் இந்தியர்களுக்கு வேண்டிய பசுவின் பாலிலிருந்து எடுக்கப்பட்ட நெய்யோ அல்லது அதைப்போலிருக்கப்பட்ட நெய்யோ இது உண்டுபண்ண என்ன செய்கிறது? மிருகங்களின் கொழுப்பிலிருந்து உற்பத்தியாக்கப்பட்ட நெய்யைப்பற்றி யோஜிப்பதில் பிரயோஜனமில்லை. ஆகையால் பருத்திக்கொட்டையிலிருந்து உண்டாக்கப்பட்ட நெய் நல்ல உபயோகமாயிருக்கும். இந்தியாவிலேயே நெய் வெகு அதிகமாய் உண்டாக்கப்படுகிறது. விலையதிகமான 2-வருஷத்திற்குமுன் வெண்ணெயின் விலையைவிட கால் பங்கு அதிகத்திற்கு நெய் விற்கப்பட்டு வந்தது. இந்தியாவில் சிலவிடங்களில் வெண்ணெய் உபயோகப்படுத்தப்படுகிறது. ஆனால் ஹிந்துக்களுக்கு அதுவும் தென்னிந்தியாவில் வெண்ணையைவிட நெய்தான் பிரதானம். நெய் உண்டாக்க வெண்ணையை நன்றாய் பொங்கவைத்து அதிலிருந்து நீர்பண்டங்கள் ஆவியாய் போகும்படியாய் காய்ச்சப்படுகிறது. காய்ச்சப்பட்ட வெண்ணையை நீராயிருக்கும்பொழுது வெகு சுத்தமாயிருக்கும் அப்பொழுது அதை ஒரு பாத்திரத்தில் ஊற்றிவைத்து குளிரவைக்கப்படுகிறது. குளிர்ந்தவுடன் அது உறைந்து மணல்மணலாயிருக்கும். நன்றாய் காய்ச்சப்பட்டால் அது ஒருவித கெட்டவாசனையுமில்லாமல் வெகுகாலமிருக்கும். நெய் நூற்றாண்டுகளுக்கு கெட்டுப்போகாமல் கார்க்கப்படுகிறது. 1876-7-வருஷத்திற்கு முன் 500-டன் நெய் ஆசியா கண்டத்தில் கீழ்ப்பாகத்திற்கும் தென்பாகத்திற்கும் எற்றுமதி செய்யப்பட்டு வந்தது. 1879-80-வருஷத்தில் 1,236,433-ராத்தல் எற்றுமதி செய்யப்பட்டது. 1907-08-வருஷம் இந்தியாவில் மாத்திரம் 406, 555-ராத்தல் நெய் இறக்குமதி செய்யப்பட்டது. 4,222,507-ராத்தல் இதர ஸ்தலங்களுக்கு எற்றுமதி செய்யப்பட்டது. விலை யதிகமாயிருக்கிறதைப் பார்த்தால் எவ்வளவு வேண்டுமோ அவ்வளவுக்குறைவாய்த்தான் அகப்படுகிறதென்று தெரியவருகிறது. பருத்திக்கொட்டையிலிருந்து நெய் உற்பத்தியாக்க பம்பாயிலுள்ள இந்திய முதலாளிகள் முயற்சியெடுக்கிறதாக தெரியவருகிறது. அவர்கள் இவ்விதம் உற்பத்தியாக்க எவ்வித யந்திரம் உயர்ந்து எவ்விதமாய் உற்பத்தியாக்கலாம் என்று யோஜித்துக்கொண்டிருக்கிறார்கள். இதில் கை தேர்ந்த ஒரு நிபுணனை இச்சாலைத்தலைவராய் நியமிக்கப்போகிறார்கள். இதனால் ஐக்கிய நாடுகளில், பருத்திகொட்டையிலிருந்து உண்டாக்கப்படும் வெண்ணை இந்தியாவில் நல்ல வியாபாரமாகுமென்று தெரியவருகிறது.

### ஓர் புதிய நூல்

ஆஸ்ட்ரேலியா தேசத்தில் ஸமுத்திரக்கரையோரத்தில் ஓர்வித புல் ஏராளமாய் உற்பத்தியாகிறதாம். இப்புல்லிலிருந்து உண்டாகும் நூல், பருத்தி நூலைவிட நேர்த்தியானதாயும், அதற்கு பதிலாய் கம்பளிநூலில் கலந்து நெய்வதற்கு ரொம்ப உபயோகமானதென்றும் சொல்லுகிறார்கள். சிறிதுநாள் முன்கம்பளியில் பருத்தி நூலைக்கலந்து நெய்பவர்களில் சிலர் ஒருசாலையில் வந்து பார்த்துக்கொண்டிருக்கும்பொழுது அச்சாலைத்தலைவர் இப்புல்லிலிருந்து எடுக்கப்பட்ட நூலுடன் கம்பளிநூலைக்கலந்து நெய்யப்பட்ட கம்பளித் துணியைக் காட்டும்பொழுது அது வெகு நேர்த்தியாயிருந்ததாம் இப்பொழுது 2,140,000டன் நூல் கொடுக்கக்கூடிய புல் ஓர் இடத்தில் இருக்கிறதாம். இது கடையில் சுமார் ரூ 35-க்கு விற்கப்படும். இந்நூல் ராத்தல்ஒன்றுக்கு 3-அணாவாகவும் டன் ஒன்றுக்கு ரூ 420-இருக்குமாம். ஆனால் ராத்தல் 1-அணாவுக்கு விற்றாலும் ஏராளமான லாபம்கிடைக்கக்கூடியதாம்

### குண்டேசி செய்தல்

முதலாளிகள் கவனித்து தங்கள் பணத்தை சில வழிக்கும் வழிகளில் குண்டேசி செய்தல் முக்கியமானது. கம்பிகள் தனியாய் வாங்கினால் இதற்கு பெரியதாயும், கடினமாயுமுள்ள யந்திரங்கள் வேண்டிய

இல்லை. எருக் கம்பிகள் கடைகளில், மாதிரிக்கும் எண்ணிக்கைகளுக்கும் தகுந்தபடி டன் ரூ.320முதல் ரூ.540 வரையில் வாங்கலாம். பருமனுக்குத் தகுந்தபடி ஒருவிஸேலா (2½-ராத்தல்) விலிருந்து 8000 முதல் 10,000 ஊசிகள் செய்யலாம், கொஞ்சங் கூட சேதமிராது. இவ்வேலைக்கு சேர்க்கும் யந்திரம் 2 இவ்விதத்தில் வேலைசெய்பவர்கள் 6, நல்லகம்பிகள் வேண்டும். 1 மனிதன் 150 முதல் 160 ஊசிகள்வரைக்கும் செய்யலாம். ஆறு மனிதர்களும் 2 யந்திரங்களும் ஒரு நாளுக்கு 5,40,000 ஊசிகள் செய்யலாம். யந்திரங்கள் கடிதங்களில் வரிசை வரிசையாக வரிசைக்கு 20, 30, 40 ஊசிகள் கோர்த்துவைக்கும். 6 குதிரை பலமுள்ள இஞ்ஜின் (Engine) வேண்டிய ராட்டணங்கள், பலகைகள் முதலானதுகள்தான் இக்கைத்தொழிலுக்கு வேண்டியவை. குண்டேசி செய்வதற்கு சிலவாகும் பணம் சற்றேறக்குறைய ரூ. 10,000 தான்.

## ஐக்கியமாகாணங்களில் சர்க்கரை உற்பத்தி

கான்பகதூர் S.M. ஹாடி அவர்கள் அல்லகாபாத்தில் 1907ம் வருஷத்தில் நடந்த இண்டஸ்ட்ரியல் கான்பரன்ஸில் சர்க்கரை உற்பத்தியைப் பிழைப்பிப்பதைப் பற்றி வாசித்த உபன்னியாஸத்திற்குப் பிறகு சர்க்கரை உற்பத்தி செய்யும்பொருட்டு சில யந்திரங்களும் ரஸாயனபதார்த்தங்களும் கொண்டுவரப்பட்டிருக்கின்றன. இது உத்தமமானவழி. சர்க்கரையை சுத்திசெய்பவர்களுக்கு இது ஒரு தூண்டுதலாயிருக்கிறது. ஆனால் அதிக சிலவில்லாமல் சர்க்கரையுண்டுபண்ண வேணுமானால் கரும்பிலிருந்துதான் எடுக்கவேணும். கருப்பஞ்சாலையில் எப்பொழுதும் வேலையிருக்கவேணுமானால் கரும்புதோட்டங்கள் ஏராளமாயிருக்கவேண்டும். இவ்விதமான சாலையொன்று இத்தேசத்தில் ஏற்படுத்த சிலதனவான்கள் முயற்சியெடுத்திருக்கிறார்கள். வெகு நேர்த்தியான சர்க்கரை இச்சாலையில் (12மணி நேரம் வேலைசெய்யும்) நாளொன்றுக்கு 3முதல் 4டன் வரைக்கும் உற்பத்தியாக்கப்படுமாம். மிருகங்களிலிருந்து எடுக்கப்படும் கரிகளும் மற்றக் கெடுதலானச்சாமான்களும் உபயோகப் படுத்தப்போகிறதில்லை. ஆகையால் இச்சர்க்கரை வெகு நேர்த்தியாயிருக்கும்.

## அனகபள்ளி பென்ஸில் சாலை

சென்றமாதம் அனகபள்ளி பென்ஸில் சாலைமுதல் முதல் பரீக்ஷைக்காக வேலை ஆரம்பிக்கப்பட்டது. அநேகம்பேர் கூடியிருந்தார்கள். யந்திரத்திலிருந்து வேகமாய் ஓடிவருகிற எழுதும் ஈயதுண்டுகளைப்பார்த்து ஆச்சரியப்பட்டார்கள். ஜெபானிலிருக்கும் ஏகடானி பென்ஸில் சாலையிலிருந்த ஷீ அவர்கள் இச்சாலைத் தலைவராய் நியமிக்கப்பட்டு அவர் அவ்விடம் வந்திருந்தார்.

## நிலம் உழுதல்—ஓர் புதுமாதிரி

இந்தியாவில் பயிர் வளரவேண்டுமானால் அதற்குத் தகுந்தபடி மழைவேண்டும். மழை இல்லாமல் போனால் வேறு எவ்விதத்திலாவது தண்ணீர் பாய்ச்சவேண்டும். கால்வாய்களோ அல்லது கிணறுகளோ இல்லாமல்போனால் பயிர் நஷ்டந்தான். இதனால் கருப்புண்டாகும் அநேக ஜனங்கள் மிருகங்கள் இறந்துவிடுவார்கள். கொஞ்சம் மழையைக்கொண்டு எப்படி பயிர் விருத்திசெய்கிறதென்பது இந்தியாவிலுள்ள பயிரிடுவோர்கள் கவனிக்கவேண்டியதுதான். இதற்கு ஐக்கிய நாடுகளைப் பார்த்தால் தெரியும். இவ்வித உழவுக்கு 3-வழிகளுண்டு. பிரத்தியேகமான பயிர்; தண்ணீர் பாய்ச்சுதல் அல்லது கிணறுகளிலிருந்து இறைத்தல்; புதுமாதிரியாய் உழுதல். மூன்றாவது சொன்னது இந்தியாவுக்கு நூதனமானது. வெகுஆழமாய் உழுது மேல்பூமியை பயிரிடும் நாட்களிலும் அதற்குமுன்னும் செவ்வையாய் உழவேண்டும். ஏனென்றால் கொஞ்சம் மழை பெய்தாலும் பனிபெய்தாலும் அதன் ஈரமானது பூமி பாதையில்லாமலிருந்தால் நிலத்திற்குள் சென்று இந்த ஈரம் உலராதபடி நல்ல புழுதியுண்டாகும். உழும்பொழுதுண்டாகும் சிறு கால்வாய்கள் காற்றோட்டத்துக்கு குறுக்காயிருக்கவேண்டும். ஆனால் இந்தியாவிலும் இந்தியாவிலுள்ள பேதமையான பயிரிடுவோர்களாலும் இது செய்யவேண்டுமானால் பிரத்தியேகமான யந்திரமும், நீராவிக் கலப்பைகளும் விதைகளை ஓரிடத்தில் விதைக்கும் யந்திரமும்வேண்டும் வருஷத்தில் 15-அங்குலத்துக்குக் குறைந்தமழையுடன் 12-அங்குல ஆழத்துக்கு உழுது 35-புஷல் கோதுமையும் 50-புஷல் நெல்லும் நல்லலாபம்கிடைக்கத்தக்க பழங்களும் எடுத்ததாக அமெரிக்காவிலுள்ள பயிரிடுவோர்களில் ஒருவன் சொல்லுகிறான். ஆகையால்தான் நிலத்துக்கு விலையதிகமாய்விட்டது. 3-வருஷத்துக்கு முன் 2-டாலருக்கு வாங்குவோரில்லாமலிருந்த நிலம் தற்காலத்தில் 25 டாலருக்கு கிடைப்பதரிதாயிருக்கிறது இவ்வகை உழுதல் ஏழை பயிரிடுவோர்களால் முடியுமென்பது ஸந்தேகம் மிக தனிகர்களான ஜமீன்தார் முதலானவர்கள் இதை பரீக்ஷித்துப்பார்த்து தங்கள் நிலங்களை நல்ல ஸ்திதிக்குக் கொண்டுவரலாம்

## அறிவிப்பு

இச்சஞ்சிகையின் முகப்படம் (Title page) தயார் செய்யுங்காலத்தில் மப்பும் மந்தாரமுமாய் சூரிய வெளிச்சம் மட்டாயிருந்ததால் படம் எடுக்கமுடியாமல் தவக்கப்பட்டது. அதனால் சஞ்சிகை வெளிவரத் தாமதமாயிற்று. தயவுசெய்து மன்னிக்கும்படி சந்தாதார்களைக் கேட்டுக்கொள்ளுகிறோம்.

## NOTICE

**We regret the delay in the publication of this issue and we beg to state that such delays will not occur in future.**

***Publishers.***

## இதரத்தமிழ் புத்தகங்கள்

ஆனந்தமடம்: தேசபக்தி புகட்டும் ஓர் அருமையான நாவல்—இந்த நாவலும் ஸ்ரீ பங்கிம் சந்திரசட்டர்ஜி பங்காளி பாஷையில் எழுதியதை ஸ்ரீ மஹேசகுமாரசர்மா அவர்கள் மொழிபெயர்த்தது. ... 0 8 0

போஜசரித்திரம்—2-ம் பதிப்பு. மனதை கவறக்கூடிய 16-ஆப்டோன் படங்கள் சேர்த்திருக்கிறது. ம-ா-ா-ஸ்ரீ ஹைகோர்ட்டு வக்கீல் T. S. நாராயண சாஸ்திரியார் இயற்றியது—ரொம்பவும் நன்றாய் அச்சிடப்பட்டிருக்கிறது. ... ... 1 8 0

| | | | |
|---|---|---|---|
| மதிகெட்ட மனைவி ... | 1 | 0 | 0 |
| தீனதயாளு ... | 0 | 12 | 0 |
| ஸ்ரீ மாமிகொலுவிருக்கை ... | 0 | 8 | 0 |
| தலையணை மந்திரோபதேசம் 3-ம் பதிப்பு | 0 | 8 | 0 |
| வேணீ ஸம்ஹாரம் ... | 0 | 3 | 0 |
| மிருச்சகடி ... | 0 | 4 | 0 |
| முத்திராராக்ஷஸம் ... | 0 | 4 | 0 |
| லீலாவதி ஸுலோசனை | 0 | 12 | 0 |
| இரண்டு நண்பர்கள் | 0 | 12 | 0 |
| மனோஹரன் | 0 | 12 | 0 |
| கள்வர் தலைவன் | 0 | 8 | 0 |
| சாரங்கதரன் | 0 | 8 | 0 |
| சத்ருஜித் | 0 | 12 | 0 |
| யயாதி | 0 | 8 | 0 |
| வேதாள உலோகம் ... ... | 0 | 8 | 0 |
| அமலாதித்யன் ... ... | 1 | 0 | 0 |
| காதலர் கண்கள் ... ... | 0 | 12 | 0 |

(லீலாவதி ஸுலோசனை முதல் காதலர் கண்கள் வரை: ம-ா-ா-ஸ்ரீ, ஹைகோர்ட் வக்கீல் பி. சம்பந்த முதலியார் இயற்றியவை.)

| | | | |
|---|---|---|---|
| வாஸந்திகா ஒரு தமிழ்நாடகம் ... | 0 | 8 | 0 |
| வெனிஸ்வர்த்தகன் ... ... | 1 | 0 | 0 |
| கற்புகரசி ... ... ... | 0 | 8 | 0 |
| குணமாலிகை அல்லது கற்பின் வன்மை | 0 | 6 | 0 |
| கனகவல்லி ... ... ... | 1 | 0 | 0 |
| கமலினிகலஹம்ஸம் ... ... | 0 | 8 | 0 |
| எலேன் ... ... ... | 0 | 6 | 0 |
| வசீகரி ... ... ... | 1 | 0 | 0 |
| ஞானரஞ்சனி ... ... ... | 0 | 8 | 0 |
| ஸுஜாதா ... ... ... | 0 | 8 | 0 |
| லலிதாங்கி ... ... ... | 0 | 8 | 0 |
| வனஸுதா ... ... | 0 | 8 | 0 |
| லலிதா ... ... ... | 0 | 10 | 0 |
| தமயந்தி .. ... ... | 0 | 9 | 0 |
| ஞானம்பாள் ... ... ... | 0 | 6 | 0 |
| மங்களாம்பாள் ... ... ... | 0 | 8 | 0 |
| கோமளம் காஞ்சியாத்திரை ... ... | 0 | 8 | 0 |
| சுகுணங்கதன் ... ... ... | 0 | 12 | 0 |
| பாவலர் விருந்து (முதல் நாள்) ... | 0 | 8 | 0 |
| வில்லிபுத்தூரார்; பிள்ளை பெருமாள் சரித்திரச் சுருக்கம் ... ... ... | 0 | 8 | 0 |
| மதிவாணன் ... ... ... | 0 | 8 | 0 |
| வால்மீகருமாயணம் கிளைக்கதைகள் ... | 0 | 8 | 0 |
| ஸ்ரீமான். ஜி. சுப்பிரமணிய அய்யர் அவர்கள் ஜீவிய சரிதம் ... ... | 0 | 8 | 0 |
| ஸ்ரீபாலகங்காதரர் ஜீவிய சரிதம் ... | 0 | 3 | 0 |
| அந்தப்புர ரகசியம் ... ... | 1 | 0 | 0 |
| கவிரத்தினசிந்தாமணி என்னும் காளிதாசன்சரித்திரம் ... ... ... | 1 | 0 | 0 |
| மோகனங்கி ... ... ... | 1 | 4 | 0 |
| குடும்ப ஸம்ரக்ஷணி ... ... | 2 | 0 | 0 |
| மன்மதகாந்தன் கதை ... ... | 0 | 8 | 0 |
| இந்து பாகசாஸ்திரம் ... ... | 2 | 0 | 0 |
| மகாமகம் அதின் மகிமை ... ... | 0 | 4 | 0 |
| ஸ்ரீ தாதாபாய் நௌரோஜியின் ஜீவிய சரிதம் ... ... ... | 2 | 0 | 0 |
| கந்தபுராணச் சுருக்கம் வசனம் ... | 0 | 12 | 0 |

ரம்யனும் ஜோலியெட்டையும் ஆங்கிலேய கவி ஷேக்ஸ்பியர் இயற்றிய ரோமியோ அண்டு ஜூலியட் நாடகத்தின் தமிழ் அமைப்பு (ஓர் புதிய நாடகம்) 0 8 0

"மானிட மர்ம சாஸ்திரம்" அரிய பெரிய காரியங்கள் ஒவ்வொன்றையும் விளக்கிக்காட்டும் சித்திரப்படங்கள் 200 அடங்கியது. விலை ரூ. 5. தபாற்செலவு பிரத்தியேகம். சிங்கப்பூர் முதலிய இடங்களுக்கு 8 ஷி.

### 1908-வருஷத்து 1-வது ஆக்ட்

### பூஸ்திதிகளிலுள்ள நிலத்தைப்பற்றிய

### சென்னபட்டணம் 1908-வருஷத்து ஆக்ட்

### (தமிழ்)

டெம்மி, 8-பேஜ்சைஸில் திடமானகிளேஸ் காகிதத்தில், தமிழிலும் இங்கிலீஷிலும் அச்சிடப்பட்டிருக்கிறது.

இங்கிலீஷ் காப்பி 1-க்கு விலை அணா 0 8 0.
தமிழ்க் காப்பி 1-க்கு விலை அணா 6.
தபால்சார்ஜு பிரத்தியேகம்.

இந்தப் புஸ்தகம் பூஸ்திதிகளையுடைய ஒவ்வொருவரிடத்திலும் அவசியமிருக்கவேண்டியது.

ஜனரல் ஸப்ளைஸ் கம்பெனி
மைலாப்பூர், மதராஸ்.

# விவேக போதினி

"எப்பொருளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்

தொகுதி 2 } ஸௌம்யஹூ ஆவணிமீ 1909-ஹூ ஆகஸ்டுமீ { பகுதி 2

## நம்பிக்கை

### FAITH

இவ்வுலகில் எவ்விஷயத்திலும் நம்பிக்கையில்லாத மனிதனே கிடையாது. இவ்வுலக வாழ்க்கையால் ஏதோ ஒரு பிரயோஜனம் தனக்கு உண்டாகும் என்றே ஒவ்வொருவனும் எண்ணுகிறான் ஆதலால் தான் எவ்வளவு கஷ்டங்கள் இவ்வாழ்க்கையில் ஒருவனுக்கு வந்தபோதிலும் அவன் அவைகளைப் பொறுத்துக்கொண்டு உயிர்தரிக்க எண்ணுகிறான். ஒரு மனிதனது ஏற்றத்தாழ்வை அவனது நம்பிக்கையினால் எளிதில் அறியலாம். 'கொண்டதே கோலம் கண்டதே காட்சி' 'விஷயபோகமே மோக்ஷம்' என்ற நம்பிக்கையை உடையவனாக ஒருவன் இருப்பின் அவன் இவ்வுலகத்திய இன்பதுன்பங்களால் மொத்துண்டு மேல் போகும்வழியறியாது தத்தளிக்கும் பாபியாவான். 'விஷயம் விஷமேயாம்' 'சிற்றின்பங்களைவிட கோடிமடங்கு மேலானதான பேரின்பம் ஒன்றிருக்கின்றது' என்ற நம்பிக்கையுடையவன் ஒருவன் உலகில் சிக்கிக்கொள்ளாது. வரும் கஷ்டங்களைத் தாங்கும் திறனுடையவனாக உலகில் ஸஞ்சரித்துவரும் புண்யாத்மாவாவான். 'உன் தோழர் இன்னாரெனக்கூறு, நீயார் என்று கூறுவன்' என்று சொல்லுவதுபோல 'உன் நம்பிக்கை இன்னது எனக்கூறு நீ இத்தகையன் எனக் கூறுவன்' என்று நாம் தைரியமாகக் கூறலாம்.

இந்நம்பிக்கை அநேகவிதமாக உலகில் காணப்படுகின்றது. நெபோலியன் என்ற அஸஹாய சூரனை பிரான்ஸ் சக்கிரவர்த்தி 'அஸாத்யம்' என்ற பதமே பாஷையில் அனாவசியம், ஏனெனில் தீரனுக்கு அஸாத்யமான காரியமே கிடையாது' என்றானாம். ஜூலியஸ் ஸீஸர் என்ற ரோம சக்கிரவர்த்தி போய்க்கொண்டிருந்த ஓர் கப்பல் பெரும்புயலில் அகப்பட்டுக்கொள்ள அதில் இருந்தோர் எல்லோரும் மிகவும் பயந்து நடுங்கிவிட்டனராம். அப்பொழுது அவர் கப்பற்காரரை நோக்கி 'பயப்படாதேயுங்கள். கப்பலில் யார் இருக்கிறது என்று எண்ணினீர்கள்! நான் இருக்கும்பொழுது உங்களுக்கு என்ன ஆபத்துவரும்' என்று தேற்றினாராம். இந்த நம்பிக்கைகள் கேவலம் ராஜஸகுண ஸம்பந்தமானவை. இவைகளுக்கு கர்வம் அல்லது அகங்காரம் என்று பெயர். இது முற்றினால் இதை உடையவனுக்குக் கேடேவிளையும். இதுபோன்ற அபாயமான ஸமயத்தில் பகவத்பக்தர்கள் 'இவை ஈசுவரன் செயல்' என்று சொல்லி தாம் ஏதோசெய்த பகவத் அபராதத்திற்காக அக்கஷ்டம் வந்ததுஎன்று எண்ணி வருந்துவார்கள். இதில் ஸத்வகுணம் முன்னதைவிட அதிகமாக இருப்பினும், இதைவிட சிறந்ததான நம்பிக்கை ஒன்றுண்டு. முன்காலத்தில் க்ரீஸ் தேசாதிபதியான அலக்ஸாண்டர் நம் பரதகண்டம் வந்து ஓர் மஹானைக்கண்டு அவருடன் வார்த்தையாடி அவரது புத்திநுட்பத்தைக்கண்டு மகிழ்ந்து தனது ஊருக்கு வரும்படி அவரை அழைத்தான். அவர் மாட்டேன் என்று சொல்லிவிட எவ்வளவோ அவன் நயந்து பார்த்தான். ஒன்றும் முடியாமல்போக 'நீர் வாராவிடில் உம்மைக்கொல்வேன்!' என்று சொன்னான். மனங்கோணாது மஹான் நகைத்து 'உன்னைப்போல என்னுடன் பொய் சொன்னவர்களே கிடையாது. என்னை எவராலும் எதனாலும் கொல்லவேமுடியாது. பிரபஞ்சத்தில் என்னைத்தவிர உண்மைவஸ்து வேறு கிடையாது' என்று கூறி மௌனமானார். இம்மாதிரி ஸதா ஸர்வகாலமும் 'யானே எங்குமாம் பிரம்மம் என்பால் கவருடைப் புவனமெல்லாம் கற்பிதம் என்று அறிந்து' தைரியமாக இருப்பதே ஸாத்விக நம்பிக்கையின் முக்கிய லக்ஷணம்.

# விவேக போதினி

தொகுதி 2] ஸௌம்ய௵ ஆவணிமீ" [பகுதி 2

## வேதாத்யயனம்
### VEDIC RECITATION

ஒவ்வொரு த்விஜனும் தன் தன் குடும்பத்திற்குச் சிறப்பென ஏற்பட்ட வேதத்தையாவது அவசியம் அத்தியயனம் செய்யவேண்டும். இதுவே த்விஜத்துவம் நிலைப்பதற்குக் குறைந்தபக்ஷம் ஒவ்வொருவனிடத்திலும் அவசியம் இருக்கவேண்டும். இன்னும் மேலான பதவியை ஒரு த்விஜன் அடைய விரும்பினால் வேதங்களில் சிலவற்றையாவது எல்லாவற்றையுமாவது அத்தியயனம் செய்யவேண்டும். த்விஜர்கள் அல்லாதவர்களுக்கு வேதாத்யயனம் செய்ய அதிகாரம் கிடையாது. கர்மகாண்டபாகங்களில் சிற்சில மந்திரங்களைப் பெண்கள் கண்டறிந்தவர்களாயிருந்தபோதிலும் ஸ்திரீகளுக்கு வேதங்களை நேரே அத்தியயனம் செய்யலாமென்ற அதிகாரம் இல்லை. உபநிஷத்துகளிலும் பெண்கள் பிரம்மவிசாரம் செய்தார்களென்பது ஆங்காங்கு காணப்படுகின்றது. புராணதிகளிலும் அருந்ததியைப்போன்ற பிரம்மசாரிணிகள் வேதார்த்தங்களை நன்றாக அறிந்திருந்தனர் என்று கூறப்படுகிறது. வேதங்களை அத்தியயனம் செய்வதற்கு அத்விஜர்களுக்கு அதிகாரம் இல்லாவிட்டாலும் நமது மதநூல்களில் ஆங்காங்கு ஸௌதபுராணிகரைப்போன்ற அத்விஜர்கள், த்விஜர்களுக்கும் ஆசாரியராய் இருந்தாரென்று நாம் தெரிந்துகொள்ளுகிறோம். ஆனால் இவ்வாறு காணப்படும் அத்விஜர்களாவது ஸ்திரீகளாவது வேதங்களைத் தாங்கள் நேரே அத்தியயனம் செய்ததாகச் சொல்லிக்கொள்ளவில்லை. வேதரகஸியங்களை வேறுவழியால் ஐயந்திரிபறத் தெரிந்துகொண்டு த்விஜர்கள் அடைந்திருந்த மேலான நிலையை இவர்களும் அடைந்திருந்தார்கள் என்று தெரியவருகிறது. வர்ணாச்சிரம விதிகளின்படி இவர்களுக்கு இவ்வதிகாரம் இல்லாமல் செய்துவிட்டார்களென்று எவ்வளவுதான் நம்முன்னோர்களை மேலாட்டவர்கள் குற்றங் கூறியபோதிலும், முன்காலத்திலிருந்த ஸ்திரீகளும், அத்விஜர்களும் இவ்விஷயத்தில் மனோவியாகூலப் பட்டுக்கொண்டிருந்தார்களென்று தெரியவில்லை. இவ்வாறு சிற்சில ஜனங்களே வேதாத்யயனஞ் செய்வதற்குத் தகுந்தவர்கள் மற்றையவர்களுக்குச் செய்ய அதிகாரமில்லை என்ற ஏற்பாட்டின் நோக்கம், வேதவாக்கியங்களின் அக்ஷர அமைப்புக்களும் ஸ்வரங்களும் மாறுபடாதிருந்து அத்தியயனம் செய்கிறவனுக்கும் அத்தியயனம் செய்துவைக்கிறவனுக்கும் நன்மைவிளைக்கவேண்டுமென்பதே, என்ற உண்மையை, நமது ஸ்திரீகளும் அத்விஜர்களும் நன்கு உணர்ந்திருந்தனர். அக்ஷர அமைப்பின் பிரயோஜனம் முன்னமே விஸ்தரிக்கப்பட்டது. இதனால்தான் ஒருதிறத்தாரிடம் வேதாத்தியயன அதிகாரம் இருந்தது. இவ்வாறு அத்தியயனம் செய்யும் த்விஜனுக்கு வியவஹாரங்களில கடுமையான விதிவிசேஷங்கள் பல ஏற்பட்டிருந்தன ஆகையால் வேதாத்தியயனம் செய்வது எளிதல்ல. முன் குறிப்பிக்கப்பட்ட விதிவிசேஷங்களுக்கு ஒரு த்விஜன் விரோதமாய் நடப்பானேயானால் அவனுக்குக் கொடிய தண்டனைகள் விதிக்கப்பட்டிருக்கின்றன. வேதவாக்கியங்களை நேரே அத்தியயனம் செய்தலைத்தவிர வேறு எந்தவிஷயத்திலும் த்விஜனுக்கும் அத்விஜனுக்கும் மதவிஷயங்களில் பேதமேகிடையாது. வேதாத்தியயனத்தால் விளைகிற நன்மை தீமைகளை நன்கு விசாரித்து உணர்ந்து, இக்காலத்தவர்கள் குதர்க்கம் செய்வதுபோலச், செய்யாது அத்விஜர்கள் இவ்வொழுங்கின்படியே நடந்துவந்தனர். த்விஜர்கள் கஷ்டப்பட்டு அடையும் முடிவை அத்விஜர்களும் எளிதில் அடையும்படி நமது முன்னோர்கள் அநேகமார்க்க விசித்திரங்களை ஏற்படுத்தி இருக்கிறார்கள். இவ்விஷயங்களை

வர்ணாச்சிரம தர்மங்களைப்பற்றிச் சொல்லும் இடத்தில் நன்கு விவரிப்போம்.

உபநயனம் ஆனவுடன் ஒவ்வொரு த்விஜனும் வேதாத்தியயனம் செய்யத் தொடங்க வேண்டும். எந்த த்விஜன் தனது குடும்பத்திற்குச் சிறப்பாய் ஏற்பட்ட வேதத்தைக்கூட அத்தியயனம் செய்யாதிருக்கிறானோ அவன் பிரஷ்டனாகிறான். வேதங்கள் நமது பிராண சிநேகிதர்கள் என்று சாஸ்திரங்கள் கூறும். இதனால் வேதங்களுக்கு ஆப்தவாக்கியம் என்ற ஒரு பேரும் உண்டு. வேதங்களை அத்தியயனம் செய்யாது விட்டவன் ஒருவன் ‘தனக்கு ஆப்தரான ஸ்நேகிதர்களை நிராகரித்தவனுக்கு ஒப்பாவான்.’ அப்படிப்பட்டவனுக்குத் தர்ம ரகஸ்யங்கள் எளிதில் விளங்கா. அவன் காதில்படும் சிறந்த விஷயங்களின் உண்மைப்பொருள் அவனுக்கு விளங்கவே மாட்டாது. ஸர்வஸாக்ஷியாய் விளங்கும் பரிசுத்தரான கடவுளைப்பற்றிச் சொல்லுகின்ற வேதங்களை அத்தியயனம் செய்யாது எவனது நாவானது ஊர் வம்பையும் அதனால் விளையும் ‘பொய்குறளை வன்சொல் பயனிலாச்சொல்’ ஆகிய இந்நான்கையும் உடைத்தாயிருக்கிறதோ அதனை நா என்று சொல்ல இடமேயில்லை. என்றும், ‘அதிக வீண்வார்த்தையை மனிதன் பேசவேண்டாம், ஏனெனில் அதனால் வீண் சிரமம்தான் விளையும்’ என்றும் சுருதிகள் கூறும். ‘வேதங்களை ஓதாது எவன் ஒருவன் மற்றை விஷயங்களில் தனது சக்தியை உபயோகப்படுத்துகிறானோ அவன் உயிரோடிருக்கும்பொழுதே தனது ஜாதியிலிருந்து பிரஷ்டனாகிறான்’ என்று ஸ்மிருதிகள் கூறுகின்றன. மேலே சொன்னபடி வேதங்களை அத்தியயனம் செய்வதால் வெகு பிரயோஜனங்கள் உண்டு. முதலில் சிராத்தாதிகர்மங்களை நடத்துவதற்கு வேதவாக்கியங்களை எளிதில் எடுத்துக்கூறும் திறமை ஒருவனுக்கு உண்டாகும். வேதபாகங்களை ஒன்றோடு ஒன்று ஒப்பிட்டு வேதரகஸியங்களையும் அறிந்துகொள்ளலாம். வேதங்களை முதல் நூலாகக்கொண்டு வெளிவந்திருக்கும் சாஸ்திரங்களைப்படித்து உள்ளபடி அவைகளின் பொருளைக் கண்டுபிடிப்பதற்கும் மிக்க உதவியாகும். அன்றியும் வேதங்களுக்கு அர்த்தம் தெரியாவிட்டாலும் ஸரியான ஸ்வரத்தோடு மாத்திரம் சொன்னால், அது அத்தியயனம் செய்பவன் மனதைச் சுத்தப்படுத்தி, அவனை மேன்மேலும் மோக்ஷமார்க்கத்தில் எளிதிற் செல்லும்படி செய்யும். இதுவுமல்லாமல் வேதங்களை ஒருவன் அர்த்தம் தெரியாது அத்தியயனம் செய்துவருவானேயானால் பாஷா கம்பீரத்தை நோக்க, அதில் சிறந்த அர்த்தம் அடங்கியிருக்கவேண்டும், என்ற எண்ணம் அவன் மனதில் உண்டாகும். அதனால் அவனுக்குக் கூடியசீக்கிரத்தில் மூடத்தனமாய்த்தான்சொல்லிவரும் வாக்கியங்களது உண்மைப்பொருளை உணரவேண்டும் என்ற எண்ணம் வரும். இந்த இச்சை உண்டானகாலத்து அதுவும் ஸித்திக்கும். வேதங்களை அத்தியயனம்செய்த ஒருவன் கூடியசீக்கிரத்தில் ஒரு நல்ல ஆசாரியனை அடுத்து முதலில் வேதாங்கங்களைக்கற்று, அதன் பின்பு வேதபாஷ்யங்கள் மூலமாகத்தான் மூடத்தனமாகச் சொல்லிவரும் வேதவாக்கியங்களின் பொருள்களை அறிய முயலவேண்டும். இவ்வாறுசெய்யாது வேதத்தைக் கிளிப்பிள்ளைப்போலத் தவறாது சொல்லும் திறமைமாத்திரமுடைய ஒருவன் கர்ப்பூரமூட்டைசுமக்குங் கழுதைக்கு ஒப்பாவான். அவனுக்கு வீண்கஷ்டம் மாத்திரமே ஒழிய அதனால் ஸுகம் ஒன்றும் உண்டாகாது. முன்காலத்திலும், இப்பொழுதிருப்பவர்களைப்போல், சில பிராம்மணர்கள் வேத வாக்கியங்களின் உண்மைப் பொருளை அறியமுடியாது கேவலம் வேதவாக்கியங்களை மாத்திரம் உருவேற்றிவந்தனர். அவ்வாறு வேதாத்தியயனம் செய்வது மனதிற்கு வீண்பாரம்தான் என்றும், அவ்வாறு வேதாத்தியயனம் செய்வதைவிடச் செய்யாமலே இருக்கலாம் என்றும் சாஸ்திரங்கள் அபிப்பிராயப்படுகின்றன.

இவ்விஷயத்தைப் பற்றிச்சாஸ்திரங்கள் பின்வருமாறு கூறுகின்றன. “வேதவாக்கியங்க

ளைப் பொருள் உணராது உருவேற்றும் அறிவிலி பாரம் தாங்கும் தூணே ஒழிய வேறில்லை. வேதங்களின் பொருளை உணர்ந்தவன் ஸகல நன்மைகளையும் அடைவான். அந்த ஞானத்தால் அவன் தனது பாபங்கள் தீரப்பெற்று மேலான பதவியை அடைகிறான். பொருளுணராது வேதங்களை அத்தியயனம் மாத்திரம்செய்தல் சாம்பல்மேற்செய்த ஆகுதிக்கு ஒப்பாகும். இந்தச்செயல் ஒருநாளும் பிரகாசிக்கமாட்டாது." வேதங்களைத் தக்கபடி அத்தியயனஞ்செய்த ஒரு பிராமணனை, சாஸ்திரங்கள் பின் வருமாறுபுகழ்கின்றன. "வேதரஹஸ்யத்தை உணர்ந்த பிராமணனிடம் ஸகல தேவர்களும் குடிகொண்டிருப்பார்கள். ஆகையால் அப்படிப்பட்ட பிராம்மணர்களைக் கடுமையான வார்த்தைகளால் வருத்தாது எல்லோரும் மரியாதை செய்யவேண்டும். இதனால் ஸகல தேவதைகளையும் நாம் திருப்திப்படுத்தலாம்." இந்த வாக்கியத்தைப் பின் வருமாறு ஸாயனாசாரியர் விவரிக்கின்றார். "நெருப்பில்லாவிடத்தில் எவ்வளவு விறகை அடுக்கியபோதிலும் அவற்றால் சிறிதும் பிரகாசம்உண்டாகமாட்டா. அவ்வாறே குருவினிடமிருந்து பொருளுணராது ஒருவன் கிரஹிக்கும் வேதவாக்கியமும் சோபிக்கமாட்டாது. ஆகையால் அவ்வாறு கிரஹிக்கப்பட்ட வாக்கியத்தை உண்மையில் வேதவாக்கியம் என்றே சொல்லுவது தகுதியல்ல. மனிதனுக்கு எதை அடைந்தால் தனது ஆசைகள் யாவும்தீர்ந்து ஸுகம்வருமோ அதை அடைவதற்கு வேண்டிய மார்க்கங்களை அறிவித்தலால் இவைகளுக்கு வேதங்கள் என்று பெயர் வந்தது. பிரத்தியக்ஷம் அனுமானம் முதலியவைகளால் அறியமுடியாத ரஹஸ்யங்களை அறிவித்தலால் வேதம் என்றபெயர் இவைகளுக்கு உண்டாயிற்று. ஆகையால் வேதவாக்கியங்களுக்கு இப்பெயர் ஸித்திக்கவேண்டுமானால் அவைகளின் பொருளை அறியவேண்டியது அவசியம்."

வேதங்களிலே இந்தப்பொருளே அடங்கிய வாக்கியம் ஒன்றுண்டு ; இதை வேதஞானத்திற் சிறந்த யஸ்கர் என்ற வித்துவான் தமது நூலில் எடுத்தாண்டிருக்கிறார். வேதஸம்பந்தமானபதினான்குசாஸ்திரங்களையும்கற்றுணர்ந்த ஒருவனை வேதங்கள் பின்வருமாறு புகழ்ந்து கூறுகின்றன. "அவன் வேதம் என்னும் அமிர்தத்தைப்பானம்செய்தவன். வாக்குவல்லமை நிறைந்தவர்களது ஸபையில் அவன் சிறந்தவன் எனமதிக்கப்படுவான். வேதவாக்யத்தை மாத்திரம்பொருளுணராது உருவேற்றும் மனிதன் புஷ்பம், பழம் இவைகள் அற்றவேதத்தைச் சுமப்பவனாவான்." ஸாயனாசாரியர் இதைப் பின்வருமாறு விவரிக்கிறார். "வேதத்தின் புஷ்பமாவது முன் விவரித்துச்சொல்லப்படும் கர்மகாண்டபாகங்களே. அவைகளின்பழமாவது பின்பாகங்களாகிய ஞானகாண்டத்தில் விளக்கப்படும் பிர்ம்மஞானமே. பிரபஞ்சத்தில் எவ்வாறு செடிகளில் முதலில் புஷ்பம் உண்டாகிப் பின்பு அதிலிருந்து பழம் உண்டாகிறதோ அதுபோல் வேதமோதல் முதலிய கர்மானுஷ்டானங்களைச் சிரத்தையாகச் செய்வதால் சித்தசுத்தி உண்டாக அதன் மூலமாகப் பிரம்மஞானமாகிய பழத்தையும் அடையவேண்டும் என்ற ஆவல் ஒருவனுக்கு உண்டாகும். வேதத்தைக் கிளிப்பிள்ளைபோலக் குருட்டுத்தனமாகக் கதறுபவன், பசுவில்லாதவிடத்தில் ஒருபசு இருக்கிறது என்றெண்ணித் தடுமாறுபவன் போல் ஆகிறான். கன்றுபோட்டுப் பால்கறக்கும் பசுவிற்கே தேனு என்ற பெயர்தகும் (தேனு—ஸுகத்தைக் கொடுப்பது). பொருள் உணராது உருவேற்றும் ஒருவனுக்கு வேதங்கள் பாலாகிய கர்மவிவேகம், பிர்ம்மஞானம் ஆகிய இவைகளை முறையே கொடுக்கமாட்டா. பசுவென்று தடுமாறும் ஒருவன் கண்கட்டு வித்தையிற் காணும் தோற்றத்தைப்போன்ற ஒன்றைக் காணுகிறானே ஒழிய வேறில்லை. இம்மாதிரியான மயக்கத்தோடு உருவேற்றும் பிராம்மணர்களுக்கு மனிதன் அடையவேண்டியதாகிய பரமபதம் ஒருபொழுதும் ஸித்திக்கமாட்டாது.

## “ரிப்பன்” தர்மபரர் அல்லது இந்தியர்க்குறவோன்

## RIPON “ THE RIGHTEOUS”

---



முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்
கிறையென்று வைக்கப்படும் ——திருக்குறள்

ஜனங்களுடைய ஸுகதுக்கங்களை தீரவிசாரித்து அவர்களுடைய கஷ்டத்தைப் போக்கவேண்டுமென்ற மனவுறுதியும்; கீழ்மையான வழியிற்செல்லாத பாவப்போக்கும்; பக்ஷபாதங்களால் அசைக்கப்படாத நீதிமுறையும்; நன்னெறியின் வழியைப்பற்றிச் செல்லும் குணவிசேஷமும்; கொடியாரை தண்டித்து அவரை நல்வழிக்குக் கொண்டுவரச்செய்யும் முயற்சியும்; ஜனங்களை கீழ்த்திசையிலிருந்து மேன்மைபெறச்செய்யும் பேரவாவும்; குடிகளது வீட்டு ஸுகங்களைக் குறைக்கக்கூடாதென்ற திடச்சித்தமும்; ஜனங்களது ஸ்வதந்திரத்தை க்ரமமாக அதிகப்படுத்தவேண்டுமென்ற கௌரவச்செயலும்; பொதுவில் ஜனங்களின் அபிமானத்தை ஆசிரயித்து செங்கோல் நடத்துவதும்; மனஸ்ஸாட்சியாக ஒவ்வோர்காரியத்திலும் ஊக்கங்கொண் டுழைக்கும் ஆர்வமும்; புறங்கூறுவாரது மொழிகளை மனதிற்கொள்ளாது நடக்கும் ஒழுக்கமும்; ஸத்தியத்திற்குக் கட்டுப்படும் மனோபாவமும்;—இவையெல்லா மெவர்க்கிருக்குமோ அவர் காக்குமம்சத்தினர் என்றே சொல்லவேண்டியது. இக்குணங்களுடையவர் அரசாட்சி தலைமையிலிருப்பின் அவ்வரசாட்சி தலைமையதென்று சொல்லாமலே தெரியும்.

இத்தகைய குணங்களையுடையவர் அரசாட்சித்தலைமையைப் பெற்றால் அவர் தமது செயல்களால் ஜனங்களுடைய ஹிருதயமுழுதையுமிழுத்துவிடுகின்றனர். அத்தகைய மஹானுபாவரது சரிதை நமது மனத்திற் கின்பம்பயத்தலுமல்லாது, குணத்தையும் நலத்தையுமுயர்த்துமாகையால் அவர்களது சரிதையை நாமறியவேண்டிய தவச்யகம்.

இத்தகையவர்களுடைய கோஷ்டியிற் சேர்ந்தவர் ரிப்பன் மஹாபிரபு. இவர் கி. பி. 1824-வருஷம் அக்டோபர் மாதம் இருபத்திநான்காவது தினத்தில் ரிப்பன் பிரபுவின் குமாரராகப் பிறந்தனர். இவர் வம்சத்தினர் ‘ஆங்கில ராஜாங்க ஜனசங்க’த்தில் தம்முடைய வாழ்நாட்களை உழைத்திருந்தனர். இவரும் சிறுவயது முதலிலிருந்து வம்சகுணத்தையே கொண்டு அவ்விடத்திலேயே தான் பெருமை விளக்குவார் என்று எண்ணி இருந்தார்கள். குருகுலவாசம்போல் சிறுவயதெல்லாம் படிப்பிலுழைத்து தமது இருபத்தைந்தாம் வயதில் ஆன் தியடோகியா வென்னும் பெயர்கொண்ட, க்ரே பிரபுவின் தௌஹித்ரியும், வயர் என்பவரது புத்ரியுமாகிய, பெண்ணணங்கைக் கலியாணம் செய்துகொண்டனர்.

1852-ம் வருஷத்தில் ராஜாங்கஜனசங்கத்தில் தமது பிரதிநிதியாக ஹல் என்னும் ஜில்லாவிலிருப்பவர்களால் நியமிக்கப்பட்டார். அப்பொழுது அவர் கோல்ட்ரிச் பிரபுவென பட்ட

மடைந்தார். ஒன்று மறந்துவிட்டோம். நாம் ரிப்பன் என்று சொல்வது ஓர் பட்டப்பெயரே அன்றி சொந்தப்பெயரன்று. இப்பட்டப்பெயர் அந்த ஆதீனத்திற்கு வருபவர்க்குத்தான் வரும். இப்பொழுது நாம் யாருடைய வாழ்க்கைச் சுருக்கத்தை எழுதுகின்றனமோ அவர் சொந்தப்பெயர் சாமியுல் ராபின்ஸன் என்பதுதான். இவருக்குகோல்ட்ரிச் பிரபு வெனபட்டம் வந்த வருஷத்திற்கடுத்தவருஷம் மே மாதம் பதிமூன்றும் தேதியன்று இவர் முதல்தரம் உபந்நியாஸித்தார். அப்பொழுதே, இவர் பெரும்பெயரோடு விளங்குவார் என்று, எல்லார்க்கும் தெரிந்தது.

1853-ம் வருஷம் முதல் 1857-வருஷம் வரை அவர் ஹட்டர்ஸ்-பீல்ட் என்னும் ஜில்லாவின்பிரதிநிதியாகவிருந்து ஓர்பெருமியக்கஞ்செய்து ஜனங்களை உயர்த்த முயன்றார். அப்பொழுதிவர்க்காகாதவர் "கோல்ட்ரிச்சான் சடங்கு" என பரிகசிப்பது வழக்கம். பின் 1857-9-ம் வருஷங்களில் கோல்ட்ரிச்பிரபு யார்க் என்னும் ஜில்லாவின்பிரதிநிதியாகமாற்றிக்கொண்டனர். 1859-ல் இவர் தகப்பனிறந்தமையாலிவர்க்கு ரிப்பன் பிரபுவென்று பட்டம் வந்தது. இதே வருஷத்தில் "க்ரே" பிரபுவென்றும், "க்ரந்தம் பாரன்" என்றும் பட்டங்கள் கிடைத்தன. 1859-1861, இவ்வருஷங்களில் 'தளநிலைமையைக் கவனிக்கும் காரியதரிசி'யாக இருந்தனர். அதன்பின் இந்தியதேசத்தின் மந்திரியாக இருந்தனர். 1863-1866 வருஷங்களில் இவர்'சைன்யவியவஹாரங்களை கவனிக்கும் ராஜாங்கப்பிரிவின் தலைவ'ராக இருந்தனர். இந்த நிலைமையில் மூன்றுவருஷங்களிருந்தார்.

இவ்வாறிருக்கும் ஸமயத்தில் இவர் மனோபவம் வரவர உயர்ந்துக்கொண்டே வந்தது. அது இரண்டு பக்கங்களிலும் விரிந்தது. இவர் ஹ்ருதயம் இந்தியநாட்டின் மேலாவஹனங்கொண்டுவிட்டது. இவர்மனமும் மாறுதலை யடைய வாரம்பித்தது. சைன்ய வியவகாரக் காரியதரிசியாகவிருந்தபொழுதே இந்தியதேசத்தை ஆளவேண்டு முறைமையைப்பற்றி அப்பொழுது ராஜப்பிரதிநிதியாக விருந்த லாரன்ஸ் பிரபுவிற்கு கடிதம் எழுதினார். அதில்இந்தியதேசத்தைச்சீர்திருத்தவேண்டுமென்றுவற்புறுத்தி எழுதிஇருந்தார். அக்காலத்தில் மந்திரிகளில் சிரோன்மணியாகிய கிளாட்ஸ்டன் என்னும் பிராதானியின் சூழ்ச்சிக்கூட்டத்து, ரிப்பனும் அங்கத்தினராக நின்றார். இது 1868-வது வருஷம். அப்பொழுது ரிப்பன் சூழ்ச்சிக்கூட்டத்தின் அக்ராஸனாதிபதியாக நியமிக்கப்பட்டார். 1870-வது வருஷத்து கல்விச்சட்டத்தில் மிகப் பிரயாசையோடு உழைத்தார். "ஆலபாமா" விஷயங்களிலும் முயற்சி மிகக்கொண்டு உதவிபுரிந்தனர்.

1873-வருஷம் கிளாட்ஸ்டன் தனது ஐரிஷாரது கல்விச்சங்கச்சட்டம், கூட்டத்தாரால் கொள்ளப்படாதுபோகவே தமது வேலையை ராஜீநாமா கொடுத்துவிட்டார். ரிப்பனுமப்படியே செய்தார். டிஸ்ரேலி என்னு மந்திரியார் தனது கட்சிக்குறைவொடு ராஜ்யமாள முடியாதெனவிலக, கிளாட்ஸ்டனே மறுபடி ராஜ்ய மந்திரியாக வந்தனர். ஆனால் ரிப்பன் மறுபடியும் தன் வேலைக்கு வரவில்லை. இது இங்கிலீஷ் ஜனங்களுக்கு ஆஸ்சரியத்தை உண்டாக்கி யிருக்கலாம். ஆயினும் நாம் முன்பே அவர் மனமுமாறுவதாகச் சொல்லி இருக்கிறோம். அவர் இப்பொழுது ரோமன் கியாதலிக் மதத்தைக் கொண்டாடி அதனிடத்தில் கலந்துவிட்டார். இதற்குள் ரிப்பன்பிரபு, ப்ரிமேசனார்க் கூட்டத்துப் 'பெருந்தலைவனாக' நியமிக்கப்பட்டார். இக்கூட்டத்தில் சேரக்கூடாதென ரோமானியமதத் தலைவர் உத்தரவளித்திருந்தபோதிலும் அவரே ரிப்பனை 1874-வருஷம் தம்மதத்தில் சேரவிட்டனர்.

1880-வருஷத்தில் ரிப்பன் இந்தியதேசத்திற்கு ராஜப்பிரதிநிதியாக அனுப்பிக்கப்பட்டனர். வரும்பொழுதே இந்தியருக்கு நன்மை செய்யவேண்டுமென்ற ஆவல் அவர்க்குண்டாய் விட்டது. வந்ததும் உப்புவரியை எங்கும் சமப்படுத்தி ஜனங்களுக்கு ஸௌகரியமளித்தனர். லேசன்ஸ் வரியையும் அழிக்க முயன்றனர்; அது அவரால் முடியவில்லை. 1873-வது வருஷம் அக்காலத்து இராஜப் பிரதிநிதியாராகிய லிட்டன் பிரபுவால் செய்யப்பட்ட இந்தியதேச பாஷை பத்திரிகைச் சட்டம் என்னும் சட்டத்தைப் பிடுங்கி, தேசபாஷை பத்திரிகைகளை பந்தத்திலிருந்து நீக்கினர். இந்தசட்டம் இந்திய சட்ட புத்தகத்திலிருந்து எடுக்கப்பட்டதைப் பற்றித் தாம் பேரானந்தங்கொண்டதாக அவர் அன்போடு சொல்லினர். இவைகளைக்காட்டிலும் சிறந்த சட்டமவரியற்றியது, உள்நாட்டு பிரஜாபரிபாலன முறைமைதான். இது இந்திய நாட்டார்க்குபதவியளிக்கவந்த முதற்படி. இதனால் ஜனங்களுக்கு பொதுவிஷய ஆவேசமும், தம் ஊர் வியவகாரங்களை தாமே யாளுந்திறமையும், இராஜாங்க விஷயங்களில் அப்பியாசமுண்டாகவும் வேரூன்றியது. இவைகளை எல்லாம் இங்கிலீஷ் நாட்டிலிருப்பவர்களெல்லாம் மிக அருவருப்புடன் நோக்கிக்கொண்டு இருந்தார். அவர் மனம் புகைவதை ஒருவாரடக்க இறக்குமதி வரியை அழித்துவிட்டார். இவர் 1884 வருஷம் தமது பிரதிநிதித்வத்தை டப்பரின் பிரபுவிற்கு ஒப்பிவித்து தன்னூடு சென்றார். அவர் செல்லும் வழிமுழுதும் ஒரே வைபவமாக இருந்தது. அவர் கடைசியாக இந்தியாவில் பேசியபொழுது,

"இங்கிலண்ட், கடவுளால் தனக்கிடப்பட்ட பெருஞ்செயலைச் செய்யவேண்டுமென்றால், இந்தியாவின்பெரும்பாரத்தையும், அந்நாட்டின் அத்புதசரித்ரத்தையும் அறிந்து, அதை ஜனஸமூககோஷ்டியில் உயர்த்தவேண்டுமென்ற ஆவலோடு, தமது தன்மனத்தையும், அடங்காத்தொழிலையும்விட்டு, அந்நாட்டார்க்கு வரவர தானனுபவிக்கிறச் சிறந்த ஸௌகர்யங்களை நிரம்பியஅளவோடளித்து, தங்களது லாபத்திற்கதையாளாது, அந்நாட்டாரது சிறந்த நன்மைக்காக உழைக்கவேண்டுமென்ற உத்ஸாகத்தோடுகூடிய மனஸ்ஸாட்சியோடு நடக்கவேண்டும். இந்தியாவிற்காக இங்கிலண்ட் பாடுபடவேண்டிய தவச்யகம் இந்தியர்களுடைய நிலைமை, செல்வமோங்கும்படியாகத்தான் அவரும் உழைக்கவேண்டும் அவர்களுக்கெவ்விதப்படிப்பும் முறைமையோடளித்து மேன்மை பெறச் செய்யவேண்டும். இதுதான் இங்கிலண்ட் தேசத்திற்கு கடவுள் அவேசித்தகட்டளை. இந்தவழியில்தான் அந்நாட்டார் நடக்கவேண்டும். இதைத்தான் நான் கொண்டு நடந்தேன்."

என்ற மொழிகள் இந்தியருடைய ஹ்ருதயத்தை இங்கலண்டைத் தமது ரக்ஷகராகக் கொள்ளச்செய்கிறது.

1905 வருஷத்தில் காம்பல்-பானர்மன் என்பவர் இங்கிலாண்டு பிரதானமந்திரியாய் இருந்தனர். இவர் 'ராஜாங்க முத்ரையின் அதிகாரி'யாக ரிப்பனை நியமித்தார். அவர்க்கிப்பொழுது வயது 79. அவருடைய இராஜாங்க தந்திர வல்லமைக்காகவே இவ்வேலை அவர்க்களிக்கப்பட்டது.

தேகநிலைமை இவரை 1908-ம் வருஷம் அக்டோபர் மாதத்தில் வேலைக்கு ராஜீநாமாகொடுக்கும்படிச் செய்துவிட்டது. இவருடைய உன்னத ஸ்திதியிலிருந்து நடத்தவேண்டிய முறைமைகளுக்கு அவருடலில் வலிமையில்லாமையால் பொதுவிஷயங்களில் இவர் அதிகமாக கவலை எடுத்துகொள்ளவில்லை. இது அவருக்கே தெரிந்தது. காம்பல்-பானர்மன் இறந்ததும் அஸ்க்வித் என்பவர் பிரதானியா இருந்தனர். அவர்காலத்தும் ராஜாங்கமுத்திரை அதிகாரியாக ரிப்பனே இருந்தார். இருந்தாரே ஒழிய தன் கட்சித்தலைமையைக் கேட்க க்ரூ பிரபுவிற்களித்துவிட்டார்.

இவர் வாழ்க்கைமுழுதும் இந்தியாவின் நிலைமையைப்பற்றியே கவலை. சாவிற்கு சிலநாள் முன்னும் இவர் இந்தியாவைப்பற்றி ஓர் உபந்நியாஸம் செய்தார். 1909-வருஷம் ஜுலை மாதம் பதினொன்றாம்நாள் வானவர் கோஷ்டியைச் சேர்ந்தார். அன்று இந்திய தேசமுழுதும் ஓர் வியஸனதினமே.

இவர்பெயர் இந்திய தேசமுழுதும் சிறுவர் சிறுமியர் வாய்களிலும் ஓர் பழமொழிபோல நடக்கிறது. அவர் மஹாநிபுணர். ஆழ்ந்தசிந்தையர். மனோதைரியங் கைவிடாதவர். ஸத்திய நிலைமையே அவரதுநெறி. “தாமின்புறுவதுலகுன்புறக்கண்டு,காமுறுவர்கற்றறிந்தார்” என்னுங் குறளடிகளுக்கிவர் வாழ்க்கையையே உதாரணமாகக் கொள்ளலாம். ஜனங்களபிமானத்தையே சிறந்த பூஷணமாக எண்ணி நடந்தவர். அவரது வாழ்க்கையை உயர்த்த வேண்டுமென்று கங்கணங்கொண்டு நியாயவழியிலுழைத்தவர். இந்திய ஹ்ருதயத்திலிருந்து என்று மழியாதவண்ணம் தன்னுருவத்தை பிம்பமாகப்பதிப்பித்து விட்டார். காடும் நிலமும் அவர் நன்மையைக்கண்டு நலத்தை விளைத்திருந்தன. அவர் போனதைக்கண்டு வருந்துவதுபோல்,வானமழிந்து,வளஞ்சுறக்காது தவிக்கின்றனவென்றுகூட சொல்லும்படியாக விருக்கிறது. ஆனால் அவரது குணங்களைக்கண்டு வியந்து ஆனந்தபாஷ்பத்தோடு வானம் மழைபெய்ய, அவரிடத்து பக்தியொடு மயிர்க்கூச்செரிந்ததுபோல் நிலம் விளையும் என்பதற்கு ஸந்தேகம் கிடையாது. அவர் பாலனந்தத்தோடெங்கும் மந்தமாருதம் வீசி கடவுளின் மஹிமையைவிளக்கி இந்தியாவின்பாலன்பின் முதிர்ச்சியி னுருவத்திற் கொருவடிவம் வருமென்று வீசாநிற்கும்.

## “ஸ்திரீகளின் அபிவிர்த்தியில் மேல்நாட்டாரும் கீழ்நாட்டாரும்”

## THE IMPROVEMENT OF WOMEN IN EAST AND WEST

---

கடவுள் மானிட வர்க்கத்தைச் சிருட்டிக்கும்பொழுது அம்மானிட வர்க்கமானது விர்த்தியாகும்பொருட்டு ஸதிரீ புருஷபேதத்தை யுண்டாக்கியிருக்கிறார். தங்கள் வர்க்கத்தை விர்த்தி செய்வதுந்தவிர மனிதருக்கு இயற்கையாகவே இன்னுஞ்சில கடமைகளும் ஏற்பட்டிருக்கின்றன. உலகபந்தத்தினின்றும் நீங்கி மோக்ஷத்தை நாடுவதே மானிடரின் முக்கியமான கடமையெனினும்,நாம்இப்பொழுதுமுற்றிலும் உலக விவகாரங்களைப்பற்றிப் பேசப்போவதால் அவ்விஷயத்தை தற்காலம் நிறுத்திவைப்போம். மனிதவர்க்கத்தை விர்த்திசெய்வது முதலான கடமைகளை நிறைவேற்றுவதற்கு சம்சாரவாழ்க்கையானது அவசியமாயிருக்கின்றது. மனிதரால் நடத்தப்படும் ஒவ்வொரு தொழிலும் சம்சார வாழ்க்கையின் நோக்கங்களாகிய (மோக்ஷவிஷயத்தைத் தவிர்த்து) உண்பது, உறங்குவது, சுகிப்பது, மனிதவர்க்கத்தை விர்த்திசெய்வது என்ற நான்கு விஷயங்களைக் குறித்தே நடத்தப்படுகின்றன. சம்சார வாழ்க்கைக்கு ஏற்பட்ட தொழில்களில் சில இயற்கையிலேயே ஸ்திரீகளுக்கும், சில புருடர்களுக்கும், ஏற்றவையா யிருக்கின்றன. வீட்டுக்கு வெளிவேலைகளாகிய விவசாயம், வியாபாரம், உத்தியோகம் முதலியவை புருடனுடைய திறமைக்கும், வலிமைக்கும் ஏற்றவையாயும், வீட்டுக்குள் வேலைகளாகிய சமையல்செய்தல், குழந்தைகளை வளர்த்தல் முதலியவை ஸ்திரீயினுடைய திறமைக்குத் தகுந்தவையாயும் அமைந்திருக்கின்றன, சம்சார வாழ்க்கையின் நோக்கங்களை நிறைவேற்ற வீட்டுக்கு வெளிவேலைகள் எவ்வளவு முக்கியமானவையோ, அவ்வளவு முக்கியமாய் வீட்டுக்குள் வேலைகளும் இருக்கின்றன. வெளிவேலைகளைச் செய்வதில் புருஷர்களுக்கு எவ்வளவு கௌரவம்

கொடுக்கவேண்டுமோ, அவ்வளவு கௌரவம் உள் வேலைகளைப் பார்ப்பதில் ஸ்திரீகளுக்கும் கொடுக்கவேண்டும். வெளிவேலைகளைப் பார்ப்பதற்கு புருஷர்கள் எங்கனம் கல்வி கற்கவேண்டியது அவசியமோ, அங்கனமே வீட்டுவேலைகளைச்செய்வதற்கு ஸ்திரீகளும் கல்விகற்கவேண்டியது அவசியமாயிருக்கின்றது.

இயற்கைச் சட்டமானது இப்படியிருக்க, நாம் சற்று மேல்நாட்டு ஸ்திரீகளின் அபிவிர்த்தியைப்பற்றி கவனிப்போம்.

மேல்நாடென்று நாம் ஐரோப்பாவையும் அமெரிக்காவையும் சொல்லுகின்றோம். ஐரோப்பாவிலும்அமெரிக்காவிலும் இந்தியாவைவிட ஸ்திரீகள் அதிகமாகக் கல்விகற்றும், அதிக சுதந்திரமடைந்துமிருக்கின்றார்கள். அப்படியிருந்தும் அவர்களிருக்கும்ஸ்திதி என்ன? நாட்டில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் ஒவ்வொரு கைத்தொழில்சாலைகளிலும் ஸ்திரீகள் புருஷர்களுக்குச் சமமாக வேலைசெய்கின்றனர். புருஷர்கள் இறங்கியிருக்கும் ஒவ்வொரு துறைகளிலும் ஸ்திரீகளும் இறங்கி, கூலிகளை சரசப்படுத்தி அதிக கஷ்டப்பட்டு வேலைசெய்யும் ஆண்மக்களுக்கு மிகுந்த நஷ்டத்தை விளைவிக்கின்றார்கள். ஸ்திரீகளின் இயற்கைக் குணங்களாகிய கற்பு, நாணம், அச்சம், மடமை முதலியவைகள் மாறி, ஆண்தன்மை அதிகரித்து பார்லிமெண்டு சபைக்கு ஸ்திரீகளையும் மெம்பர்களாக எடுக்கவேண்டுமென்று கலகஞ்செய்யத் தலைப்பட்டிருக்கிறார்கள். ஸ்திரீகள் பொது விஷயங்களில் சிரத்தையெடுத்துக்கொள்வதால் அவர்களுடைய இயற்கை குணங்கள் மாறுவதற்கு யாதொரு காரணமுமில்லையென்று பலர் ஆக்ஷேபிக்கின்றனர். இதை நாம் சிறிதேனும் ஒப்புக்கொள்ளவில்லை. இதுவரையில் தன் இயற்கைத்தன்மையானது கெடாமலிருக்கும்வண்ணம் அதிக சிரத்தை செலுத்திவந்த ஒருஸ்திரீயானவள் தன் தன்மைக்குக் கொஞ்சமேனும் பொருந்தாத ராஜாங்கம், வியாபாரம், யுத்தம் முதலிய வியவகாரங்களில் சிரத்தை யெடுத்துக்கொள்ளும்பக்ஷத்தில், தன் தன்மையைக்காப்பாற்ற அவள் செலுத்தவேண்டிய கவனமானது குறைகின்றதல்லவா? அவளுக்குத் தன் பெண்தன்மையைவிட ராஜாங்கவிவகாரங்களில் தன்கக்ஷியே அதிக முக்கியமுள்ளதாகத் தோன்றுகின்றது. அவள் பொதுவிவகாரங்களில் தன் கக்ஷியானது சோர்வடையாமலிருக்கும்பொருட்டு தன் இயற்கைக் குணங்களையும் இழப்பதற்குத் தயாராயிருப்பது ஒரு ஆச்சரியமன்று. மிகவும் நாகரீகமடைந்திருக்கிற மேல்நாடுகளிலும் ஏன் இக்கெடுதிகள் சம்பவித்தன என்பதற்கு ஒரே விடைதான் உண்டு; அவர்கள் இயற்கைச் சட்டத்தை முற்றிலும் மறந்துவிட்டார்கள்.

ஸ்திரீகளின் தன்மை மாறுபடுவதால் நாட்டின் க்ஷேமத்துக்கு ஹானி வருமென்பதற்குச் சந்தேகமில்லை. ஸ்திரீகளும், குழந்தைகளும், பாடுபடுவோருமே, ஒரு ஜாதியாரின் க்ஷேமத்துக்கு ஆதாரமாயிருப்பவர்கள். இவர்களுடைய ஸ்திதியானது மாறுபடும்பொழுது நாட்டின் ஸ்திதியும் மாறுபடும். நாட்டிலுள்ள லக்ஷாதிபதிகளையும், புத்திமான்களையும், ஒருமரத்தின் புஷ்பங்களுக்கும், பழங்களுக்கும், ஸ்திரீகளையும், குழந்தைகளையும், பாடுபடுவோரையும், அம்மரத்தின் வேர்களுக்கும் ஒப்பிடலாம். ஸ்திரீகளின் தன்மை மாறுபடுவதால் குழந்தைகளின் தன்மையும் மாறுபடுகின்றது. நாட்டின் இனி க்ஷேமமானது இப்பொழுதிருக்கும் குழந்தைகளைப் பொறுத்தது என்பதை நாம் சற்றும் மறந்துவிடக்கூடாது. குழந்தைகளுக்குச் சிறுவயதில் தாயைவிட வேறு நல்ல உபாத்தியாயர்கள் கிடையாது. தாயானவள் தன் குழந்தையைக்குறித்து சிரத்தை யெடுத்துக்கொள்ளாமல் உத்தியோகத்தின்மேல் போய்விட்டால் பிறகு குழந்தைக்குத் தாயின்மேல் எப்படி அன்புண்டாகும்? புருஷனானவன் தன் உத்தியோகத்தைப் பார்த்துவிட்டு களைப்போடு வீட்

டுக்கு வந்தவுடன், இனியவசனங்களாலும், பார்வைகளாலும், அக்களைப்பைநீக்கி, இன்பந்தர, ஸ்திரீயானவள் வீட்டிலில்லாமல் ரயில்வேஸ்டேஷனில் டிக்கட்டுக் கொடுக்கும் உத்தியோகம் பார்க்கச் சென்றுவிட்டால் ஸ்திரீயின் மேல் புருஷனுக்கு எங்கிருந்து உள்ளன்புண்டாகும்? ஒரு குடும்பத்திலுள்ள தாய், தகப்பன், குழந்தை இவர்களில் ஒருவர்க்கொருவர் உள்ளன்பில்லாம லிருக்கும்பொழுது, தேசத்து ஜனங்களில் ஒருவர்க்கொருவர் எங்ஙனம் உள்ளன்புண்டாகும்? ஆகையால் ஸ்திரீகளின் அபிவிர்த்தியில் இயற்கைக்கு விரோதமாகப் போவதால் நாட்டில் ஒருவர்க்கொருவர் அன்பு குறைந்து, குழந்தைகள் சரிவர பழக்கப்படாமல், தேசத்தின் க்ஷேமங்குன்றி, கடைசியாக நாடானது அநாகரீகமென்ற கடலில் முழுகிப் போகின்றது. நாம் இதுவரையில் ஸ்திரீகளின் அபிவிர்த்திவிஷயமாக இயற்கையின் சட்டத்தையும், மேல்நாட்டுவழக்கங்களையும்பற்றி விவரித்தோம். இனிக் கீழ்நாட்டுஸ்திரீகளின் அபிவிர்த்தியைப் பற்றிச் சற்று கவனிப்போம்.

கீழ்நாடென்று நாம் ஆசியாகண்டத்தைக் குறிப்பிடுகின்றோம். ஆசியாகண்டத்தில் முன்னுக்குவாராத தேசங்களைத் தவிர்த்து தற்காலத்து நாகரீகத்தில் விர்த்தியடைந்து வருகின்ற ஜப்பான், சீனா, இந்தியா இம்மூன்று தேசங்களைமட்டும் நம் விவகாரத்துக் கெடுத்துக்கொள்வோம். முதலாவது ஜப்பானில் ஸ்திரீகளின் நிலைமையைப்பற்றிக் கவனிப்போம். நாடெங்கும் ஸ்திரீகளுக்கான கலாசாலைகள் ஏற்பட்டு, ஆயிரக்கணக்கான ஸ்திரீகள் கல்விகற்று வருகின்றனர். ஆனால் மேல்நாடுகளைப்போல புருஷனுக்கும் ஸ்திரீக்கும் எந்தத் தொழிலிலும் போட்டியென்பது கிடையாது. ஸ்திரீகளுக்கான கலாசாலைகளில் உபாத்தியாய உத்தியோகம் தவிர மற்றப்பிரவிர்த்திகளில் ஸ்திரீகள் இறங்குவதேயில்லை. இதனால் சிலஸ்திரீகளைத்தவிர மற்றெல்லோரும் வீட்டிலேயேயிருக்கின்றனர் என்பது தெளிவாய் விளங்குகின்றது. ஆனால் நம்நாட்டு ஸ்திரீகளைப் போல் வீட்டில் சோம்பலாய்க் காலத்தைக் கழிக்கின்றார்களோயெனின், ஜப்பானில் கைத்தொழிற் சாலைகளில் உற்பத்தி செய்யப்படும் பொருள்களைவிட வீடுகளில் ஸ்திரீகளால் உற்பத்திசெய்யப்படும் பொருள்கள் அதிகமாயிருக்கின்றது என்பதை நாம் நன்கு அறியவேண்டும். ஜப்பானிய வீடுகளில்ஸ்திரீகள்ஒரு நிமிஷநேரமாவது வேலையில்லாம லிருக்கமாட்டார்கள். உலகத்தில் நாகரீகமுள்ள மற்ற எந்த தேசத்தைக்காட்டிலும் ஜப்பானில் வீட்டுவேலைகள் பார்ப்பதற்கு மிகவும்சுலபமானது. தவிர, அங்கு வேலைக்காரிகள் மிகவும் சரசமானபடியால் அநேகமாக எல்லா மத்தியவகுப்புக் குடும்பங்களிலுங்கூட வீட்டுவேலைகளைப்பார்ப்பதற்கு வேலைக்காரிகள் அமைத்திருக்கின்றனர். ஆகையால் ஜப்பானில் உயர்வகுப்பு, மத்தியவகுப்பு ஸ்திரீகளுக்கு வீட்டு வேலைகளைத்தவிர, மற்றக் கைத்தொழில்கள் செய்வதற்குப் போதுமான அவகாசம் கிடைக்கின்றது. கால்களில் அணியும் மேஜோடு நெய்தல், பிரம்புப்பெட்டிகள் பின்னுதல், வர்ணக்காகிதங்களினால் விசிறி முதலான சித்திரவேலைகள் செய்தல், பெட்டிகளுக்கு நம் நாட்டில் "ஜப்பான்" என்று வழங்கும் வர்ணம் பூசுதல் முதலிய பலவகைத்தொழில்கள் வீட்டிலேயே ஜப்பானிய ஸ்திரீகளால் செய்யப்படுகின்றன. வியாபாரிகள் வீடு வீடாகச்சென்று இச்சாமான்களை வாங்கிச்சேர்த்து அந்நியநாடுகளுக்கு ஏற்றுமதி செய்கின்றனர். ஜப்பான் தேசமானது அதிக நாகரீக மடைந்திருக்கின்றதென்பதற்குச் சந்தேகமில்லை. ஆனால் தேசமானது நாகரீக மடையும்பொழுது ஸ்திரீகளும் தங்கள் பெண் தன்மையைவிட்டு ஆண்தன்மையடையவேண்டுமென்பது அவசியமில்லை.

ஜப்பானிய ஸ்திரீகள் கல்விகற்றும், நாகரீக மடைந்து மிருந்தபோதிலும், புருஷனை மீறு